தோற்றுவிப்பது ஆகாயத்துலவும் ஆதித்தனன்றோ? தேவரீர் அவ்வாதித்த மூர்த்தியைப்போன்றே சர்வான்மாக்களது நல்வினை தீவினைகளையெல்லா முள்ளபடியறிந்து அவரவர்களது ஒவ்வொரு பிறவிகட்கும் பயனுதவு முதவி நாயகனென்றறியுமாற்றலற்றுப் பிற்றற்றுருத்தியாமிந்த பேயுடலையோம்பி நின்றேனே! இனித் தேவரீரது திவ்ய திருவடித்தாமரையின் பிரபாவமனைத்தையு மறிவதென்றுகொலோவென்றுந் துதிக்கின்றான். 81

இன்னுஞ் சீவகோடிகட்கெல்லாங் கண்களிருந்தும் சூரியப்பிரகாசமில்லாவழி யெங்ஙனம் பண்டங்கள் புலவுங் காணப்படுவதில்லையோ அதேபோல தேவரீர் எல்லா சீவகரணங்களிலுங் கலந்து அவைகளை யதனதன்றொழிலில் பிரவிர்த்திக்கச்செய்து நின்றாலும் தம்மைக்காண்பது அரிதாகின்றதே! ஆராயும்போது அக்கருவி கரணங்களுக் கெட்டாதவனென்றும், வேதத்துக் கெட்டா விழுப்பொருளெனவும் விளங்குகின்றதே! இத்தகைய தத்துவானன்னியனாய தேவரீர் சீவ சிருட்டிக்கெனவெடுத்தருளிய திருவவதாரத்தைச் சர்வசாமானியமாய்க் கன்றுமேய்த்த கண்ணனென்பதால் குறையொன்றில்லாக் குணக்கடலென்றறியு மறிவில்லையேயென் றிவ்வாறாகவும் போற்றுவானாயினன். 82

ககனப்பரப்பில் உலவும் மேகங்கள் அதற்கெவ்வளவோ வியரத்தில் விளங்கும் சூரியசந்திராதியர்களை மறைக்கின்றவாறு போலத் தேவரீரையாராய்ந்தறியுமாற்றலில்லாத ஊனக்கண்ணர்களுக்கு மறைந்திருப்பதாகவும், ஏதோ ஜனன மரணமானது போன்றும் விளங்குமன்றி மெய்யறிவுடையோரது மெஞ்ஞானத்தால் பார்க்கும்போது என்றும் பிறந்திறவாதபேரருளுருவாய் விளங்காநிற்கும் பரமயோகியும் நீரேயாகின்றீர் என்றிவ்வாறாகவுந் துதிக்கின்றான். 83

பஞ்சபூதங்களிலொன்றாய ஆகாயவெளியானது தனக்குள் எல்லாப் பண்டபதார்த்தங்களையுமடக்கி யிடங்கொடுத்துக் கலந்து நிற்கின்றவாறுபோலவே சர்வாண்ட புவனங்களையு மும்மிடத்தே வைத்திருப்பினும் தேவரீர் அவைகளிலே சிறிதுஞ் சாராதிருக்குந் தந்திரமெப்படியோ தெரியேன்; இவ்வாறான தம்முடைய அருட்டிறமறியா யேனையோர் சிலர் தம்மைப் பசுமேய்த்தானென்றாலும் கோபிகளைப் புல்லினானென்றாலும் தேவரீர்க்குக் குணதோஷ மொன்றுங்காணேமே, என் இறையவனே! என்றிவ்வாறாக வாழ்த்துவானாயினன். 84

சங்கற்ப விகற்பமென்பது சிறிதுமின்றி ஒப்பற்ற வொரு பொருளாய் விளங்குந் தேவரீர் இச்சேதன சேவபரங்களைக் கலந்து கொண்டு அபேதனாய்க் காணப்படுகின்ற பரம சாமர்த்தியத்தை யாராயுமிடத்துச் சந்திராதியர்கள் தண்ணீரிற் பிரதிபலித் தசை வது போன்றும், கண்ணாடியிற்பொருந்திய பலவர்ண பேதங்களைப்போன்றும் அவைகளோடு ஒன்றுபட்டதுபோல ஆன்மாக்களது கருவிகரணாதிகளின் வாயிலாக அலைப்புண்டு அவைகட்கு முக்கியஹேதுவாயும் நின்ற ஏசக்கரதரா! தேவரீரது திவ்யாகிருதியாகிய அகண்டாகாரத் திருமேனியைக் காண்பானிந்த வூனக்கண்ணிரண்டும் போராதே! அங்ஙனங்கண்டோமென்று கூறுவது மலடிமைந்தனென்பதுபோலாம். என்றிவ்வாறாகவும் வாழ்த்துகின்றான். 85

என்னை யின்னானென் றறியவொண்ணாது இயல்பாகவே மறைத்துள்ள மாயாந்தகாரத்தை அரிய ஞானபானுவைக்கொண்டோடி உண்மைப்பொருளின்னதென்னத் தோற்றுவித்த உத்தமசற்குருவே! இப்போது தேவரீரித்தன்மையரென்றும், தமியேனின்னானென்றுஞ் செவ்வனே யறிந்தேனாதலால் இனியெனக்கோர் தற்சுதந்திரமு மின்றெனக்கண்டேன். எல்லாந் தேவரீரது ஆக்ஞையேயாம். யானெனதறப் போதித்தருளிய ஞானாசிரியரே! தேவரீரிதுகாறும் கூறியபடியே பற்றில்லாது எனது எதிரிகளாகிய துரியோதனாதியர்களோடும் போர் புரிவான் சித்தமொருமித்துளேன், என்று அவரது ஆக்ஞைமேற்கொண்டு தனது ஒப்பற்ற காண்டீபத்தைக் கையிலெடுத்து யுத்தசன்னத்தனாயிருக்கின்றான் என்று சஞ்சயர் கூறினரென்க. 86

இதனைச் செவிமடுத்த துரியோதன மகாராஜன் சஞ்சயரை நோக்கி முக்காலமுணர்ந்த ஏ முனிபுங்கவ! தேவரீர், அன்னோரிருவரும் சம்பாஷித்துவந்த சத்திய விர்த்தாந்தங்களனைத்தையு மெவ்வா றுணர்ந்தீர்களென்னலும், சஞ்சயர், ஏ மகாராஜனே! எனது அத்யந்த ஞானாசிரியர் வேதவியாசரன்றோ? அவரே யித்துணையும் சமயநேர்ந்துழி யுபதேசித்தவண்ணம் யான் றங் கட்கோதலாயினேன். ஆனால் இவ்வரியசம்பாஷணையை மற்றியாருமறிந்திலர். என்றுகூறி அத்தியந்தானந்த வசத்தராய்த் துதிகூறுவாராயினர். 87

ஏ திரிதராட்டிர மகாராஜ! மகாஞான சிகாமணியாய் விளங்கிய அருச்சுனனும், ஸ்ரீமந் நாராயணனவதாரமாகிய கிருஷ்ணமூர்த்

தியுமாகச் சம்பாஷித்த சரியை கிரியா யோக ஞானனுபூதி விஷ
யங்களனைத்தையுங் கேட்டமாத்திரத்தே [illegible]மாநந்தசாகரத்தில்
மூழ்கியவனாய்த் தேகம்புளகாங்கிதத்தோ[illegible] மெய்சிலிர்ப்ப அதி
யாச்சரியமடைந்து தங்கட்குரைப்பத் த[illegible]டேன். 88

அன்றியும், பரமயோகியும், ஸ்ரீமந்[illegible]வதாரமுமாய
நந்தகோபாலமூர்த்தியார் அதிப்பரம யி[illegible] வுபதேசித்
தருளிய இந்தவொப்பற்ற கன்மயோக ஞா[illegible]யைச் சதுர்
வேத சம்பன்னரான வியாசமகாரிஷியின் [illegible]ாக யானுங்
கேட் டானந்தசாகரத்திற் படிந்தேன். 89

ஏ மகாராஜ! சாலோக சாமீப சாரூப [illegible]யுச்சிய முதலான
சர்வபதவிகட்கு மேதுவாய் விளங்கிய அரிய பெரிய கிருஷ்ணார்ச
சுன சம்வாத கீதையின் பிரபாவத்தையும், ஞானார்த்த தத்து
வார்த்தங்களின் இரகசியங்களையுங்கேட்ட என்மனமும் அறிவும்
அடிக்கடி அதனையே சிந்தித்துச் சிந்தித்துப் பேரானந்தப் பெருங்
கடலு ளாழ்கின்றன. 90

இதுமட்டோ! ஸ்ரீபகவான் அருச்சுனனது வேண்டுகோட்
கிசைந்து எடுத்தருளிய விசுவரூபக்காக்ஷியின் விசேஷத்தை யான்
பார்த்ததுமுதல் என்மனம் எண்ணியெண்ணித் தேகபுளகித
மாய்ப் பரவசப்பட்டு என்னறிவு இன்பமயமாகின்றது. என்றுங்
கூறுவாராயினர். 91

ஓய் சஞ்சயரே! இதுநிற்க; இப்போது நீர் பார்த்தவரை
யில் இவ்விருதிறத்தாரும் யுத்தஞ்செய்வார்களாயின் ஜெயம்
பெறுவார் யாவரெனக்கேட்ட திரிதராட்டிரனை நோக்கிச் சஞ்
சயர், ஏ மகாராஜனே! தர்ம தேவதா சொரூபமாக ஸ்ரீகிருஷ்ண
பகவானும், ஒப்பற்றகாண்டீபத்தைக் கைப்பற்றுநின்ற யாதொரு
அருச்சுனனும், மற்றுந் தர்மநியாயமென்னு நீதிநெறியும், இராஜ
லெக்ஷ்மிதேவியும வாசஞ்செய்துள்ள தெந்தப்பக்கத்திலோ
அவாகளே பூரணமாய் வெற்றிபெறுவார்களென்பது என்னறி
வில் விளங்குகின்றது. ஆகவே தாம் துரியோதனனுள்பட யாவ
ரும் யுத்தஞ்செய்வதை நிறுத்திவிடுதலே யுக்தமெனக்கொண்டு
பகவானாய் விளங்கும் தேவகீகுமாரரான ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி
யைச் சரணடைதலே நலமெனத்தோன்றுகின்றது. என்று
சஞ்சயர் கூறிநிறுத்துகின்றார். சுபம்.

இவ்வாறு ஸ்ரீகிருஷ்ணபகவான் திருவாய் மலர்ந்தருளிய கருணாமிர்தமாகிய [illegible]வாசகத்தை, யாதொரு விஜயவீரனை அருச்சுனன் [illegible]ல் சர்வசௌபாக்கியங்களோடுங்கூடிய வெற்றியையும் [illegible] மோக்ஷங்களையும் எவ்வாறுபெற்றுப் பெருவாழ்வெய்தின[illegible]போலவே ஞானமோக்ஷாஸ்பதமான இக்கீதா நவநீத[illegible]ரோர் கேட்டோர் பிரசங்கித்தோர் முதலிய யாவரும் பெறுதற்கரிய ஞான மோக்ஷங்களையெய்திப் பேரானந்த முறுவ[illegible]து சத்தியமேயாம். சுபம்.

சஞ்சேப அத்தியாய

முற்றிற்று.

[illegible] அத்தியாயம் 18–க்கு–சுலோகப் பொழிப்பு-716.

**பகவத்கீதா நவநீத வசன**

முற்றிற்று.

---

ஸ்ரீ கிருஷ்ணாய பரப்ரம்மணே நம:

